# பதிலுக்குப் பதில்

நாஞ்சில் சம்பத், எம்.ஏ., எம்.பில்.,

ம.தி.மு.க. மாநில கொள்கை விளக்க
அணிச் செயலாளர்

# 1. சொல்வது சரியா? சொல்லுங்கள்

நடந்து முடிந்த பன்னிரண்டாவது நாடாளு-மன்றத்திற்கான பொதுத் தேர்தலில் நிலையான ஆட்சி : திறமையான பிரதமர் என்ற முழக்கத்தை முன் வைத்து தேர்தலை எதிர்கொண்டது மறுமலர்ச்சி திராவிட முன்னேற்றக் கழகம். அ.தி.மு.க., பி.ஜே.பி., பா.ம.க. ஆகிய கட்சிகளோடு தேர்தல் உடன்பாடு கண்டு சந்தித்த தேர்தலில் ம.தி.மு.க அங்கம் வகித்த கூட்டணி மக்களின் பேராதரவைப் பெற்று மகத்தான வெற்றிய ஈட்டியது. அரை நூற்றாண்டு கால சுதந்திர இந்தியாவில் காங்கிரஸ் அல்லாத ஒரு ஆட்சியை எதிர்பார்த்த மக்கள் வாஜ்பாய் பிரதமராக தீர்ப்பளித்தார்கள்.

பெற்ற வெற்றியின் மகிழ்ச்சியைக் கொண்டாட முடியாமல் ஜெயலலிதா முட்டுக்கட்டை போட்டார். முரண்பட்டார். ஆட்சி அமைக்க ஆதரவு கடிதம் கொடுப்பதிலேயே தாமதம் செய்தார். தயக்கம் காட்டினார். நிலையான ஆட்சி என்ற கனவு நீர்மேல்க்குமிழி ஆயிற்று.

ஆனால் மறுமலர்ச்சி தி.மு.க. அடல்பிகாரி வாஜ்பாய் ஆட்சி அமைக்க ஆதரவு கடிதத்தை பி.ஜே.பி. கட்சியின் தலைமை அலுவலகத்துக்கும் குடியரசுத் தலைவருக்கும் உடனடியாக அனுப்பி வைத்து நம்பகத்தன்மைக்கு நல்ல உதாரணமாக விளங்கியது.

ம.தி.மு.க.வின் இந்த நடவடிக்கை மக்கள் மன்றத்தில் வைகோவின் மதிப்பை உயர்த்தியது. வக்கிர புத்தி கொண்ட ஜெயலலிதா கும்பலுக்கு எரிச்சலை ஏற்படுத்தியது. என்னைக் கேட்காமல் எங்களிடம் கலந்து ஆலோசிக்காமல் எப்படி வைகோ வாஜ்பாய் அரசு அமைய ஆதரவு

கொடுக்கலாம் என்று எரிய ஆரம்பித்தார்கள், எடுத்தேன் கவிழ்தேன் என ஏசத் தொடங்கினார்கள். நத்திப் பிழைக்கும் நாய்களை விட்டு நாலாந்தர நரகல் நடையில் வைகோவையும் மறுமலர்ச்சி தி.மு.க.வையும் விலாநோக விமர்சிக்க ஆரம்பித்தார்கள். வைகோ பெற்ற வெற்றி நாங்கள் போட்ட பிச்சை என்று பிலாக்கணம் பாடினார்கள். பாடுகிறார்கள்.

இப்படியொரு அரசியல் நிலைபாட்டை அ.தி.மு.க. தலைமை எடுத்ததற்காக ம.தி.மு.க. அதிர்ச்சி அடையவும் இல்லை. அந்த நாலுகால் பிராணிகளுக்குப் பதில் சொல்வதையும் தவிர்த்துக் கொண்டது. காரணம் அச்சத்தால் அல்ல – அரசியல் நாகரிகம் கருதி. சிந்திக்கிற பொது மக்களின் சிந்தையில் இடம் பிடித்துக் கொண்டிருக்கும் வைகோ இதை அலட்சியப் படுத்தினார். மாசற்ற தலைவர் மக்கள் திலகம் எம்.ஜி.ஆரின் விலை மதிக்க முடியாத தொண்டர்கள் கவலைப்படும்படி நமது நடவடிக்கைகள் அமைந்து விடக்கூடாது என்பதிலே வைகோ கண்ணும் கருத்துமாக இருந்தார், இருக்கிறார். உயர்ந்த வானத்தின் உச்சியில் இருக்கும் பறவை தரையில் இருக்கிற மேடு பள்ளங்களைப் பற்றி கவலைப் படுவதில்லை என்பதற்கு அரசியல் சாட்சியாக வைகோ இருக்கிறார்.

காலடிக்குக் கீழே காணாமல் போன காலங்களை மீட்க வைகோவின் அணி வகுப்பில் அணிவகுத்திருக்கும் ஒரு தூய தொண்டன் கேட்கிறான். அவர்கள் சொல்வது சரிதானா? சொல்லுங்கள். இந்த ஓட்டை உடைசல்களின் ஒப்பாரியில் உமி அளவு உண்மையாவது ஒட்டி – யிருக்கிறதா? இந்த அரசியல் அலிகளின் ஆரவாரக்

*சொல்வது சரியா? சொல்லுங்கள்*

கூச்சலில் அணு அளவேனும் நியாயம் தொக்கி நிற்கிறதா? குட்டிச் சுவர்கள் குரைத்து விட்டுப் போகட்டும் என்று பெட்டிப் பாம்பாய் அடங்கிக் கிடக்க வேண்டும் என்பது அரச கட்டளையா? அநியாயம் என்றால் அது ஆண்டவன் கட்டளையாக இருந்தாலும் மறுதலிப்பதும் விவாதிப்பதும் தானே ஜனநாயகம்.

அய்ந்து ஆண்டு காலம் அரசாண்டு முதலமைச்சராக இருந்து சந்தித்த 1996 பொதுத் தேர்தலில் அ.தி.மு.க.வின் கதி என்ன? பிச்சை போட்டோம் என்று எங்களைக் கொச்சைப் படுத்தும் ஜெயலலிதாவின் புதிய பூசாரிகள் புத்தியை அடகு வைக்காமல் சித்த சுத்தியோடு சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

பட்டி தொட்டிகளும் பாமரர்களும் அடங்கிய பர்கூர் தொகுதியில் அதிகாரத் துஷ்பிரயோகம் செய்தும், அனைத்து வாக்காளர்களுக்கும் அள்ளி அள்ளி கொடுத்தும், சாம, பேத, தான, தண்டம் எல்லாம் செய்து பார்த்தும் - அதிகாரத்தில் இருந்த அம்மா வெற்றியை அறுவடை செய்ய முடியவில்லையே ஏன்? ஏன்? ஏன்? கண்ணை மூடும் காலம் வரையிலும் மண்ணை ஆண்டு மகுடம் தரித்த எம்.ஜி.ஆர் நிர்மாணித்த அ.தி.மு.க.விற்கு இப்படியொரு ஆபத்து சூழ்ந்தது எப்படி? அதிகாரத்தில் இருந்த ஒரு அமைச்சர் கூட கரைசேர முடியவில்லை. ஒரு சட்டமன்ற உறுப்பினர் கூட மீண்டு வரமுடியவில்லையே ஏன்? தேர்தல் களத்தில் ஜெயலலிதாவின் படத்தைப் போட்டு ஓட்டு கேட்கிற துணிவும் யோக்கியதையும் கூட வேட்பாளர்களுக்கு இருக்கவில்லை. வெற்றிச் சின்னம் இரட்டை இலையை நினைவு படுத்த இரட்டை விரலைக் கூட விரித்துக் காட்ட

முடியாமல் விழி பிதுங்கி நின்றதை நாடு பார்த்துக் கொண்டு தானே இருந்தது.

வெற்றிச் சரித்திரம் படைத்த 1998 பொதுத் தேர்தலில் இராமநாதபுரம் நாடாளுமன்றத் தொகுதியில் அதிமுக வெற்றி பெற்றது. ஆனால், இராமநாதபுரம் நாடாளுமன்றத் தொகுதிக்குட்பட்ட அருப்புக்கோட்டை இடைத் தேர்தலில் அதிமுக தோற்றுவிட்டது. ஒரே நாளில் ஒரு வாக்குச் சாவடியில் ஒரே சின்னத்தில் போட்டியிடுகிற நாடாளுமன்ற வேட்பாளருக்குக் கிடைக்கிற ஓட்டை விட சட்டமன்ற வேட்பாளருக்குக் கிடைக்கிற ஓட்டு குறைவாக இருக்கிறது. அதே போல நீலகிரி நாடாளுமன்றத் தொகுதிக்குட்பட்ட குன்னூர் சட்டமன்றத்திற்கான இடைத் தேர்தலிலும் வாக்காளர்கள் அதிமுகவை நிராகரித்தார்கள். எங்களால் தான் உங்களுக்கு வெற்றி கிடைத்தது என்றும், வாஜ்பாயை நாங்கள் தான் தமிழ்நாட்டிற்கு அறிமுகம் செய்து வைத்தோம் என்றும், ஆளப் பிறந்தவர்கள் நாங்கள் தான் என்றும் ஆணவத்தின் கொம்பில் நின்று கொக்கரிப்பவர்கள் அருப்புக்கோட்டையிலும் குன்னூரிலும் அதிமுக தோற்று திமுக வெற்றி பெற்றதற்கு என்ன பதில் சொல்லப் போகிறார்கள்.

இலட்சக் கணக்கான இலட்சியத்தை நேசிக்கும் இளைஞர்களின் தோளில் காலூன்றி வெற்றி தோல்விகளைப் பற்றி கவலைப்படாமல் காலம் ஒன்று வரும் என்று கருதி கடமையாற்றும் மறுமலர்ச்சி திமுகவை ஆசிரமம் என்றும் அகதிகள் என்றும் இழித்தும் பழித்தும் பேசுவதில் இன்பம் காணும் சில்லறைகளுக்கு இப்படி நம்மை விமர்சித்தால் பிழைப்பு நடக்கும். பிச்சைக்காசு

கிடைக்கும். ஆனால் உண்மைகள் உறங்கி விடாது. உன் மத்தர்கள் உணர மறுத்தாலும் உண்மைகளின் ஊர்வலத்தைத் தடுக்கவும் முடியாது.

மறுமலர்ச்சி திராவிட முன்னேற்றக் கழகம் வான்மழையை எதிர்பார்த்து வளருகிற கட்சி. கால் நூற்றாண்டு காலம் உழைத்தால் அடைகிற வளர்ச்சியை ஆறாண்டு காலத்தில் எட்டிய இயக்கம் மறுமலர்ச்சி தி.மு.க. தேர்தல் வரும், போகும். வெற்றி கிட்டும், கிட்டாமல் போகும். அதையும் தாண்டி பயணிக்க வேண்டிய தூரம் நீண்டு கிடக்கிறது என்றெண்ணி இரவும் பகலும் சோர்வு இடையறாது இயங்கும் இலட்சக் கணக்கான தொண்டர்களைக் கொண்ட ஒரே அரசியல் கட்சி மதிமுக. சந்தித்த முதல் களத்தில் போட்டியிட்ட அனைத்துத் தொகுதிகளிலும் தோல்வியைத் தழுவிய போதும் தொலைந்து போகவில்லை. மறுமலர்ச்சி திமுக இருந்தது எதையும் நாங்கள் இழந்துவிட வில்லை. எதிர்காலத்தில் ஈட்டப் போகிற வெற்றிக்கு இப்போது நாம் விதைத்திருக்கிறோம் ; வியர்வை சிந்தியிருக்கிறோம் என்ற அளவில் தேர்தல் முடிவுகளை செரித்துக் கொண்டோம். ஏற்கனவே வெற்றி பெற்று இருந்தால் தானே இப்போது தோற்றுப் போய் விட்டோமே என்ற நினைப்பு வரும். ஆகவே தோற்றோம் தொலைந்தோம் என்ற எண்ணமே எங்களுக்கு வரவில்லை.

எங்கள் கையிலிருந்து மண்குடம் கீழே விழுந்து உடைந்தது என்றால் உங்கள் கையில் இருந்து விழுந்தது எண்ணெய்க்குடம் அல்லவா? ஊழல்காரி, ஊதாரி ஓய்யாரி, என்ற பழியைச் சுமந்து ஆட்சி அதிகாரத்தை இழந்து

## 6

## *சொல்வது சரியா? சொல்லுங்கள்*

வெளியே தலை காட்ட முடியாமல் மூலையில் முக்காடு போட்டு முடங்கிக் கிடந்தது அதிமுக. சலவைக்குப் போட்ட வேட்டியைக் கூட வாங்க மனமில்லாமல் வருத்தத்தைச் சுமந்து நின்ற அப்பாவி அண்ணா திமுக தொண்டன் இப்பாவி நம்மை இக்கதிக்கு ஆளாக்கி விட்டாளே என்று தலைமையின் மீது பொல்லாக் கோபத்தில் இருந்தான். செல்லாக் காசாகி விடுவோமோ என்ற அச்சத்திலும் அதிர்ச்சியிலும் உறைந்து போயிருந்த அவனை உயிர் கொடுத்து உலவ விட்டவர் வைகோ என்பதை அத்-தொண்டனின் மனச்சாட்சி சொல்லும். கூலிக்கு மாரடிக்கும் காலிகளின் கழுதைச் சத்தத்தை அவன் கூட கணக்கில் எடுத்துக் கொள்ளவில்லை.

சரி! வாதத்திற்கு வருவோம். வாலறுந்த நரிகளின் ஓலத்தில் ஆகாயம் ஒன்றும் அழுக்காகி விடாது. யாருக்கு யார் போட்டார்கள் பிச்சை? சிவகாசி பழனி திண்டிவனம் ஆகிய மூன்று இடங்களிலும் மறுமலர்ச்சி தி.மு.க. பெற்ற வெற்றியில் அதிமுகவிற்கும் பங்கு உண்டு. நாளும் கோளும் இடம் மாறினாலும் நாங்கள் நன்றி மறக்க மாட்டோம். வெற்றிப் படிக்கட்டில் மதிமுகவைக் கொண்டு வந்து சேர்த்ததில் அதிமுக தொண்டனின் பங்களிப்புக்கு, சிவகாசித் தொகுதியில் இரண்டாயிரத்து முந்நூறு கிராமங்களில் அடிமனத்தின் ஆழத்தில் இருந்து நன்றி மலர்களைக் காணிக்கை ஆக்கிப் பேசினார் வைகோ. வில்லிபுத்தூர் தேரடி வீதியில் ஆடிப்பெருக்கெடுத்து ஓடி வரும் வெள்ளமெனத் திரண்ட பெருங்கூட்டத்தில் அதிமுக அமைப்புச் செயலாளர் அண்ணன் தாமரைக் கனிக்குக் கணையாழி அணிவித்து நன்றியை வெளிப்படுத்தினார் வைகோ. தமிழுலகம் ஆவலுடனும் பரபரப்புடனும் எதிர்-

*சொல்வது சரியா? சொல்லுங்கள்*

பார்த்த சிவகாசிக் களத்தில் வேட்பாளராக நின்று கொண்டே திருநெல்வேலி, தென்காசி, திருச்செந்தூர், பெரியகுளம், இராமநாதபுரம், சிவகங்கை, கோபிசெட்டிப்பாளையம், பொள்ளாச்சி, வட சென்னை ஆகிய தொகுதிகளில் நின்ற அதிமுக வேட்பாளர்களை ஆதரித்துப் பிரச்சாரம் செய்யவும் நேரம் ஒதுக்கித் தந்தார் வைகோ என்றால் பிச்சை போட்டது யார்? கடைசிக்கட்ட பிரச்சாரத்தில் நேரம் கடந்து சிவகாசி மேடைக்கு வந்து அவமானப்படுத்தியதையும், விருதுநகரில் காத்திருந்த கூட்டத்தைப் புறக்கணித்து விட்டு புறவழிச்சாலை வழி மதுரைக்கு ஓடிப்போனதையும், மதிமுக தொண்டர்கள் மறந்து விடவில்லை என்பதையும் கண்ணாடி வீட்டில் இருந்து கல்லெறிகிறவர்களின் கவனத்திற்குக் கொண்டு வருகிறோம்.

இதோ நீங்கள் எறிந்த அம்புகள் எய்த கணைகள் உங்களை நோக்கியே திரும்பி வருகிறது. மதிமுக துணைப் பொதுச் செயலாளர் நெருப்புக் கவிஞர் தத்துவக் கவிஞர் குடியரசு 1996ல் திருப்பெரும்புதூரில் வாங்கிய வாக்குகள் 44884. 1998ல் வெற்றி பெற்ற அதிமுக வேட்பாளர் வேணுகோபால் 24795 ஓட்டு வித்தியாசத்தில் வெற்றி பெற்றார் என்றால் யாருடைய தயவிலே வெற்றி பெற்றீர்கள்.

மதுராந்தகம் ஆறுமுகம் 1996ல் செங்கல்பட்டில் வாங்கிய வாக்குகள் 44384. 1998ல் வெற்றி பெற்ற அதிமுக வேட்பாளர் பன்னீர்செல்வம் 22916 ஓட்டு வித்தியாசத்தில் தான் வெற்றி பெற்றார்.

மாணவர் அணிச் செயலாளர் சபாபதி மோகன் 1996ல் கடலூரில் வாங்கிய வாக்குகள் 55110. 1998ல் வெற்றி பெற்ற அதிமுக வேட்பாளர் தாமோதரன் 27129 ஓட்டு வித்தியாசத்தில் தான் வெற்றி பெற்றார்.

*சொல்வது சரியா? சொல்லுங்கள்*

மதிமுக தேனி மாவட்டச் செயலாளர் கம்பம் என்.இராமகிருஷ்ணன் 1996ல் பெரிய குளத்தில் வாங்கிய வாக்குகள் 91601. 1998ல் அதிமுக வேட்பாளர் முத்தையா 70663 ஓட்டு வித்தியாசத்தில் தான் வெற்றி பெற்றார்.

மதிமுக அரசியல் ஆலோசனைக் குழு உறுப்பினர் மூர்த்தி 1996ல் கரூரில் வாங்கிய வாக்குகள் 61188. 1998ல் அதிமுக வேட்பாளர் தம்பித்துரை 43673 ஓட்டு வித்தியாத்தில்தான் வெற்றி பெற்றார்.

பசும்பொன் பாண்டியன் 1996ல் திண்டுக்கல்லில் வாங்கிய வாக்குகள் 54202. 1998ல் அதிமுக வேட்பாளர் சீனிவாசன் 16199 ஓட்டு வித்தியாசத்தில் தான் வெற்றி பெற்றார்.

கார்த்திகேயன் 1996ல் புதுக்கோட்டையில் வாங்கிய வாக்குகள் 60405. 1998ல் அதிமுக வேட்பாளர் ராஜா பரமசிவம் 30520 ஓட்டு வித்தியாசத்தில் தான் வெற்றி பெற்றார்.

ம.தி.மு.க. தணிக்கைக்குழு உறுப்பினர் திருப்புவனம் பாலுசாமி 1996ல் இராமநாதபுரத்தில் வாங்கிய வாக்குகள் 61622. 1998ல் அதிமுக வேட்பாளர் சத்தியமூர்த்தி 24092 ஓட்டு வித்தியாசத்தில் தான் வெற்ற பெற்றார்.

ம.தி.மு.க. தேர்தல் பணிதுணைச் செயலாளர் குட்டி என்ற சண்முக சிதம்பரம் 1996ல் திருநெல்வேலியில் வாங்கிய வாக்குகள் 77643. 1998ல் அதிமுக வேட்பாளர் ஜனார்த்தனம் 6904 ஓட்டு வித்தியாசத்தில் தான் வெற்றி பெற்றார்.

ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்பார்கள். இங்கே பானைச் சோறே பதம் பார்த்திருக்கிறோம். இப்போது என்ன சொல்லப் போகிறீர்கள். நாங்கள் சொல்கிறோம்.

உங்கள் வாட்கள் துருப்பிடித்துப் போயின!
உங்கள் ஈட்டி கள் மழுங்கிப் போயின!
உங்கள் கவசங்களில் சகதி!
இன்னும் ஏன் உயிர் வாழ்கிறீர்கள்?
இன்னும் ஏன் போர்க்களத்தில் நிற்கிறீர்கள்?

(கலீல் ஜிப்ரான்)

## 2. பதிலுக்குப் பதில்

1999 ஏப்ரல் 17ல் பன்னிரண்டாவது பாராளுமன்றம் ஒரு ஓட்டில் கலைக்கப்பட்டு விட்டது. கலைக்கக் காரணமாக இருந்தவர்களின் சடை பாரம் கலகலத்துக் கொண்டு இருக்கிறது.

அடல்பிகாரி வாஜ்பாய் தலைமையில் இருக்கிற தேசிய ஜனநாயக முன்னணி ஜூன் திங்களில் தேர்தலை எதிர்கொள்ளத் தயார் என்று அறிவித்தது. ஆனால் சந்தர்ப்பவாதக் காங்கிரசும் சதிகார ஜெயா கும்பலும் மாறுவேட மார்க்ஸிஸ்டுகளும் தேர்தல் ஆணையத்திற்குக் காவடி எடுத்துத் தேர்தலை செப்டம்பருக்குக் கொண்டு போயிருக்கிறார்கள். தேர்தலைத் திணித்த தேச விரோத சக்திகள் தேர்தலைச் சந்திக்கத் தயாரில்லை.

எப்போது தேர்தல் வந்தாலும் வெற்றித் திருமகளின் மாலை வாஜ்பாய் கழுத்தைத் தான் அலங்கரிக்கும் என்பதற்கான அறிகுறிகள் அரசியல் வானத்தில் பளிச்சிடத் தொடங்கி விட்டன. வடபுலத்தில் சோனியா காந்தியின்

*பதிலுக்குப் பதில்*

பொதுக்கூட்டத்திற்கும் காங்கிரசின் பேரணிக்கும் மக்கள் திரளவில்லை என்ற செய்திகள் வந்த வண்ணம் உள்ளன. தேர்தல் வருவதற்குக் காரணமாக இருந்தவர்கள் வரும் தேர்தலில் காணாமல் போவார்கள் என்பது வெள்ளிடைமலை.

வெற்றி நாற்று நம் பாத்தியில் நல்லபடியாக வளருகிறது. காற்று நம் பக்கம் கவரி வீசுகிறது. மதச்சார்பின்மை என்ற மந்திரக்கோலை வைத்துக் கொண்டு தேசிய ஜனநாயக முன்னணியை வீழ்த்தி விட காங்கிரஸ் கனவு காணுகிறது.

தமிழ் நாட்டில் வினோதமான காட்சிகள் அன்றாடம் அரங்கேறிக் கொண்டு இருக்கிறது. சங்கரையாவும் நல்லகண்ணுவும் சேலையைப் பிடித்துக் கொண்டு கரையேறத் துடிக்கிறார்கள். ஜெயலலிதாவின் நிழலில் ஒதுங்கப் போன பன்மொழிப் புலவர் அப்துல் லத்தீபின் தேசிய லீக் லீக்காகிக் கொண்டு இருக்கிறது. தலைவர் அப்துல் ஜப்பாரும் அறவக்குறிச்சி சட்டமன்ற உறுப்பினர் முகமது இஸ்மாயிலும் தமிழ் மாநில தேசிய லீக் ஒன்றைத் தொடங்கி கலைஞருடன் கை கோர்த்து விட்டார்கள். ஜப்பானார் முடிவு எடுப்பதற்கு முன் தேர்தல் முடிந்து விடும் என்கிறார்கள் அரசியல் பார்வையாளர்கள். சோனியாஜியின் தூதர்கள் போயஸ் தோட்டத்திலிருந்து வறட்சியோடு திரும்புகிறார்கள். திராவிடர் கழக பொதுச் செயலாளர் மானமிகு.வீரமணி 'கடவுளை மற, ஜெயலலிதாவை நினை' என்ற பல்லவியோடு பவனி வருகிறார். மதவாதத்தை எதிர்க்கிற புண்ணிய வதியை அன்றாடம் சாதீய வாதத்தைக் கடை விரிக்கும் தலைவர்கள் அன்றாடம் சந்தித்து ஆதரவை அள்ளிப் பொழிகிறார்கள். சில குட்டித் தலைவர்கள் பெட்டி கிடைக்கும் என்ற எதிர்பார்ப்பில் மதவாதத்தைத் தகர்ப்போம் என்ற சுலோகத்தை உச்சரித்து உயிர் வாழ்கிறார்கள்.

மாயத்தோற்றத்தைச் சிருஷ்டிக்க முயற்சிக்கிறார்கள். இப்படிச் சத்தம் போட்டே சமய நல்லிணக்கத்துக்கும் சமூக அமைதிக்கும் அரசியல் ஸ்திரத் தன்மைக்கும் ஆபத்து விளைவிக்க ஆசைப் படுகிறார்கள். சென்னையிலும் கோவையிலும், திருச்சியிலும் காவல்துறை அலுவலகங்களுக்கு முன்னால் வைக்கப்பட்ட குண்டை வெடிப்பதற்கு முன்னே காவல்துறை கண்டெடுத்த போது வயிற்றில் பால்வார்த்தது போன்ற மகிழ்ச்சி பொது மக்களுக்கு. வெடித்து விபரீதம் விளைய வில்லையே என்ற கவலை அவர்களுக்கு.

எது மதச்சார்பின்மை? வாஜ்பாய் அரசைக் கவிழ்த்ததும், இப்போது வாஜ்பாய் தலைமையில் இருக்கும் தேசிய ஜனநாயக முன்னணியை வீழ்த்துவதும்தான் மதச்சார்பின்மையா? உங்கள் மொழியில் மதச்சார்பின்மை என்றால் என்ன? என்ற எம் தாப்புக் கேள்விகளுக்கு இன்னும் பதில் வரவில்லை.

மதச்சார்பின்மைக்கு நாங்கள் அக்மார்க் ஐ எஸ் ஐ முத்திரை பெற்றவர்கள் என்று மார்தட்டும் காங்கிரஸ், கம்யூனிஸ்ட், ஜெயா கும்பல்களின் மறுபக்கத்தை புரட்டிப் பார்த்தால் மதச்சார்பின்மை என்ற வார்த்தையை உச்சரிப்பதற்கு இவர்களுக்குத் தகுதி இல்லை என்பது புலப்படும்.

வரலாற்றுப் புகழ் பெற்ற பாபர் மசூதியை காவி உடுத்தி கடப்பாறை தரித்த காவிகள் உத்வேகத்துடன் உடைத்து நொறுக்க ஊர்வலமாய் வந்த போதும் உடைத்து நொறுக்கிய போதும் அதிகாரத்தைக் கையில் வைத்துக் கொண்டு வேடிக்கை பார்த்த காங்கிரஸ்.

*பதிலுக்குப் பதில்*

கொள்ளையடிக்க வந்த வெள்ளை ஏகாதிபத்தியம் விட்டு விடுதலையாகி வெளியேறிய பின்னால் வைதீக வர்ணாஸ்ரமக் கருத்துக்கள் கொண்ட வந்தே மாதரப் பாடலை வந்தனம் செய்து கல்விக் கூடங்கள் பாடுவதற்கு உத்தரவு போட்ட காங்கிரஸ். . . .

ஆர்.எஸ்.எஸ்.மீது விதிக்கப்பட்டிருந்த தடையை விலக்கி அந்த அமைப்பைத் தாராளமாக உலவ விட்ட காங்கிரஸ். . . .

பாபர் மசூதி தகர்க்கப்பட்டதற்கு பஜ்ரங் தள்ளும், ஆர். எஸ்.எஸ் என்றும், விஸ்வ ஹிந்து பரிஷத்தும் தான் காரணம் என்பத உண்மையானால் முள் மரத்தை முளையிலேயே வெட்ட முனையாமல் அந்த அமைப்புகளைக் கட்டவிழ்த்துக் களத்தில் இறக்கிய காங்கிரஸ். . . .

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத்து ஏழுக்கு முன்னால் அஞ்சல்துறை, தொலைத் தொடர்புத் துறை, பாதுகாப்புத் துறை போன்ற முக்கியமான மத்திய அரசு இலாகாக்களில் இஸ்லாம் ஆனவர்களைச் சேர்க்கவோ ஏற்கனவே சேர்ந்து விட்டவர்களை ஊக்குவிக்கவோ வேண்டாம் என்று இரகசிய அறிக்கை தந்த காங்கிரஸ். . . .

பாகிஸ்தான் பிரிவினையில் நாட்டமோ ஆர்வமோ திட்டமோ இல்லாதவராக இருந்த, இன்னும் சொல்லப்போனால் ஆரம்ப கட்டங்களில் பாகிஸ்தானை ஏற்றுக் கொள்ளாத அதி தீவிரமான தேசப் பற்றாளன் தேசிய முஸ்லீம் காயிதே ஆதம் ஜின்னாவை பிரிவினை வாதத்தின் பக்கம் கொண்டு தள்ளி குலத் துரோகம் இழைத்த காங்கிரஸ். . . .

***பதிலுக்குப் பதில்***

காங்கிரஸ் என்பது இந்தியாவில் உள்ள இந்து மக்களின் ஸ்தாபனம் என்ற உணர்வை ஜின்னாவுக்கு ஏற்படுத்த படாதபாடு பட்ட காங்கிரஸ். . . .

இராமர் கோவில் பூட்டைத் திறந்தால் இந்துக்களின் ஓட்டைப் பெறலாம் என்று கணக்கிட்டு விஸ்வஹிந்து பரிஷத்துடன் ஒப்பந்தம் செய்து கொண்டு செங்கல் பூஜைக்கு வழி திறந்து விட்ட காங்கிரஸ். . . .

முஸ்லீம் மதவாதக் கோரிக்கைக்காக சுப்ரீம் கோர்ட் தீர்ப்பை அர்த்தமும் அடிப்படையும் அற்றதாக சட்டம் இயற்ற தீர்மானித்த காங்கிரஸ். . . .

இந்திரா காந்தி அம்மையார் கோரமாக சுட்டுக் கொல்லப்பட்ட அந்த ஈரமான பொழுதுகளில் வாக்காளர் பட்டியலைக் கையில் வைத்துக் கொண்டு மூவாயிரத்துக்கும் மேற்பட்ட சீக்கியப் பெருமக்களை அனாயாஸம் கண்டு கொன்று குவித்த கொடுங்கோன்மைக் காங்கிரஸ். . . .

இந்திரா காந்தி அம்மையார் கொலையுண்டதற்குப் பிறகு நடந்த பொதுத் தேர்தலில் `உங்கள் டாக்ஸி டிரைவர் சீக்கியர் என்றால் ஜாக்கிரதை' என தலைப்பாகையும் தாடியும்கொண்ட சீக்கியர் படங்களுடன் பட்டப்பகலில் பிரச்சாரம் செய்த பித்தலாட்டக் காங்கிரஸ். . . .

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பது பொழுதுகளில் ஜம்மு காஷ்மீரில் இந்து மத வாதம் பேசி ஓட்டு வாங்கிய காங்கிரஸ். . . .

*பதிலுக்குப் பதில்*

ஏன்? மூன்று திங்களுக்கு முன் இந்தியாவின் மதச்சார்பின்மை நிற்பதற்கும் நிலைப்பதற்கும் காரணம் இந்து மதம் தான் என்று இதோபதேசம் செய்த காங்கிரஸ் – மதச்சார்பின்மை பற்றிப் பேசினால் கேழ்வரகிலே நெய் வடிகிறது என்றால், காளை மாடு காலை மாலை தலா பத்து லிட்டர் பால் தருகிறது என்றால், அவித்த முட்டையை அடை காத்ததில் அஞ்சு குஞ்சு பொரித்தது என்றால், பொரிக்கடலை தின்ன முடியாத பொக்கைவாய்க் கிழவி போன மாதம் இரட்டைக் குழந்தைகள் ஈன்றெடுத்தாள் என்றால் – யார் தான் நம்புவார்கள்.

1975 இரண்டாவது சுதந்திரப் போரில் ஜனசங்கத்துடன் இணைந்து பணியாற்ற ஒப்புக் கொண்ட கம்யூனிஸ்டுகள், பாரதீய ஜனதா ஆதரவுடன் அமைந்த வி.பி.சிங் மந்திரி சபையை ஆதரித்த கம்யூனிஸ்டுகள், 1967ல் சில மாநிலங்களில் ஜனசங்கத்துடன் சேர்ந்து கூட்டணி ஆட்சியில் பங்கேற்ற கம்யூனிஸ்டுகள், ஏ.எஸ்.கே. அய்யங்கார் - பாப்பாங்குளம் சொக்கலிங்கம் பிள்ளை - சங்கரன் நம்பூதிரிபாடு - அச்சுதமேனன் - வாசுதேவ நாயர் - அனந்தன் நம்பியார் – கே.பி.எஸ்.கோன் .. என சாதிப் பெயர்களை இழக்க விரும்பாத கம்யூனிஸ்டுகள், மத அடையாளத்தின் சின்னமாக விளங்குகிற டர்பன், தாடி, கங்கணம், கத்தி, சீப்புகளை எல்லாம் சுமந்து திரியும் சுர்ஜித்துகளைத் தலைவர்களாக தலையில் தூக்கி வைத்துக் கொண்டாடும் கம்யூனிஸ்டுகள்... மதச் சார்பின்மைக்கு விளக்கம் தருகிறார்கள். வியாக்கியானம் செய்கிறார்கள். விரிவுரை ஆற்றுகிறார்கள். விட்டேனா பார் என்று எகிறிக் குதிக்கிறார்கள். கேவலம் மதுரைக்காகவும், கோவைக்-காகவும்.

### *பதிலுக்குப் பதில்*

செங்கல் பூஜைக்கு ஆரத்தி எடுத்த ஜெயலலிதா, கார சேவைக்கு தன் சொந்தச் செலவில் ஆள் அனுப்பிய ஜெயலலிதா, பாபர் மசூதி உடைக்கப்பட்ட பின்னால் டெல்லியில் கூடிய தேசிய ஒருமைப்பாட்டுக் குழுவில் கல்யாணத்தை ஆதரிக்கிறேன். ஆனால் குழந்தை பெற்றுக் கொள்வதை எதிர்க்கிறேன் என்பது மாதிரி பாபர் மசூதி இடிக்கப்பட்ட இடத்தில் இராமர் கோவில் கட்டப்பட வேண்டும் - அதன் பக்கத்தில் பாபர் மசூதியும் நிர்மாணிக்க வேண்டும் என விளக்கம் தந்த வித்தகி ஜெயலலிதா, மத்திய சிறை ஆனாலும் சரி மௌரியா ஷெரட்டன் ஹோட்டல் ஆனாலும் சரி பூசை புனஸ்காரம் என புரட்சி செய்யும் ஜெயலலிதா, வகுப்பு வாத நச்சு மரங்களை வளர்க்க சாதித் தலைவர்களை ஊக்குவிக்கும் ஜெயலலிதா - மதச்சார்பின்மை அணிக்குத் தலைமையாம். கசாப்புக்கடை பக்கிரி திருவருட்பாவுக்கு விருத்தியுரை எழுதுகிறார். வாய்மையே வெல்லும் என்ற தலைப்பில் சுப்பிரமணியசாமி சொற்பொழிவு ஆற்றுகிறார். சந்தத் திருப்புகழுக்கு கருப்பையா மூப்பனார் விளக்கம் தருகிறார். ஆறடிக் கூந்தலின் ரகசியம் என்ற பொருளில் துக்ளக் சோ புத்தகம் எழுதுகிறார். ஓட்டு போடுவது எப்படி? என்ற தலைப்பில் வானொலியில் பேசுகிறார் சேடப்பட்டி முத்தையா. ஆம் - தோழர்களே! ஆம் - ஜெயலலிதா மதச்சார்பின்மை பற்றி நீட்டி முழக்குகிறார்.

அடல் பிகாரி வாஜ்பாய் ஆட்சிக்கு வந்த பிறகு சாதி சமயக் கலவரங்கள் இல்லை. மதச் சார்பின்மைக்கு எந்த ஊனமும் ஏற்பட்டு விடவில்லை. அப்படி ஒரு ஆபத்து ஏற்பட்டு விடுமானால் கலைஞரும் வைகோவும் பதுமை மாதிரி பார்த்துக் கொண்டிருக்கப் போவதும் இல்லை. மதச்

## *பதிலுக்குப் பதில்*

சார்பின்மைத் தத்துவத்திற்கு தமிழகத்தைப் பொறுத்த வரையில் நம்பகமான தலைவர்கள் கலைஞரும் வைகோவும் தான் என்பதை மத்தளம் கொட்டி வரிசங்கம் நின்றூதிச் சொல்வோம்.

பகை கக்கும் பாகிஸ்தானோடு நல்லுறவு வைத்துக் கொள்ள பரிசுத்தமான இதயத்தோடு வழிவகை கண்டவர் வாஜ்பாய். அமிர்தசரஸிலிருந்து லாகூர் வரையிலான பேருந்து பயணம் அதை அகிலத்திற்கு அறிவித்தது. வாஜ்பாயும் நவாஸ்ஷெரீபும் கட்டித் தழுவியதைக் கண்டு உலகம் கைகொட்டி ஆரவாரித்தது. இதை ஒரு பொதுக்கூட்ட நிகழ்வில் எங்கள் தலைவர் வைகோ பெருமிதத்தோடு சொன்னார். "போப் ஆண்டவருடைய வாட்டிகனும் ஃபிடல் காஸ்ட்ரோவினுடைய கியூபாவும் இடையில் இருந்த தடையை அகற்றிக் கொண்ட போது அகிலம் மகிழ்ந்ததைப் போல், கிழக்கு ஜெர்மெனி மேற்கு ஜெர்மெனி என்று இரண்டாம் உலகப் போருக்குப் பின் இடையில் பிரித்து வைத்த பெர்லின் சுவர் உடைத்து நொறுக்கப்பட்ட போது ஜெர்மானியர்கள் மகிழ்ச்சியால் ஆனந்தக் கூத்தாடியதைப் போல், எகிப்திய நாட்டின் அன்வர் சதாத்தும் இஸ்ரேல் நாட்டின், மெனசெம்பகினும் கேம்ப்டேவிட்டில் கை குலுக்கிய போது உலகம் நிம்மதிப் பெருமூச்சு விட்டதைப் போல், பாலஸ்தீன் தலைவர் யாசர் அராபத்தும் யூதர் நாட்டுத் தலைவர் இட்சாக் ராபினும் வெள்ளை மாளிகையில் உடன்பாடு செய்து கொண்டபோது உலகம் பாராட்டியதைப் போல இந்தியாவின் வாஜ்பாயும் பாகிஸ்தானின் நவாஸ் ஷெரீபும் ஆரத் தழுவிக் கொண்டபோது அகிலமே மகிழ்ந்தது" என்று

***பதிலுக்குப் பதில்***

சரித்திர சம்பவங்களோடு ஒப்பிட்டுப் பேசினார் வைகோ. இப்போது ஊருக்கும் உலகத்துக்கும் இதுதான் தேவை.

ஒவ்வொருவரும் மானுட சமுத்திரம் நானென்று கூவ வேண்டிய கால கட்டம் இது. ஊழல் பேய்களின் மதவாதக் கூச்சலில் சதியும் சகதியும் நிரம்பி வழிகிறது.

அடித்த கொள்ளைக்கு அம்மா நடத்தும் நாடகம் இது என்பதை அனைவரும் அறிந்தே வைத்திருக்கிறார்கள். வழக்கை முடிக்க வாஜ்பாய் முன்வரவில்லை. வழக்கைப் போட்ட கலைஞர் அரசைக் கவிழ்க்கவும் வாஜ்பாய் தயாரில்லை. ஆயுதத் தரகன் குட்ரோச்சியின் கூட்டாளிக்கும் இது தான் சிக்கல். "தேசத்தை விற்றுத் தீக்கிரையாக்குங்கள். சாம்பலை விற்றாவது சம்பாதிக்கலாம்" என்று எண்ணியவர்கள் தேர்தலைத் தெருவுக்குக் கொண்டு வந்து விட்டார்கள்.

அத்தக் கூழுக்கும் ஆழாக்கு அரிசிக்கும் உத்தரவாதம் இல்லாத ஏழை மக்கள்,

ஆளான நாள் முதலா ஆத்தாளின் பழம்புடவை
தனித்துணியே எடுத்ததில்லை
தங்கச்சிக்கு என் கிழிசல் – என
அன்றாடம் அழுது தொலைக்கும் தங்கைகள்......

ஏலாது படுக்கும் எண்சாண் உடம்மை முடக்க நாலுசாண் அகன்ற ஓலைக் குடிசைக்கும் வழியில்லாமல் நடு வீதிக்குத் துரத்தப் பட்ட மக்கள்...

*பதிலுக்குப் பதில்*

பெற்ற பட்டம் பிச்சைப் பாத்திரம் ஆகி விட்ட அதிர்ச்சியில் அலைபாயும் விழிகளுடன் விடியலைத் தரிசிக்க ஏங்கும் இளைஞர்கள்...

ஏழை வறுமைக் கோட்டுக்குக் கீழே வெளவால்களைப் போல பஞ்சப் பரம்பரையாய்த் தொங்கும் பல கோடி மக்களின் வரிப்பணம் தேர்தல் திருவிழாவிற்கு அரசு செலவழிக்க வேண்டியுள்ளது.

தேர்தல் சந்தையில் ஏழை மக்களை வெள்ளிக்காசுக்கு வாங்கி விடலாம் என்ற மமதையில் தான் நாளும் நமதே நாற்பதும் நமதே என்ற நம்பிக்கையில் இருக்கிறார்கள்.

அது நடக்காது. வஞ்சிக்கப்பட்ட நாங்கள் வட்டி கொடுத்து பழக்கப்பட்டவர்கள். எறிந்த கற்களை எய்த அம்புகளை எடுத்து வைத்து நேரம் வரும்போது வட்டியும் முதலுமாக திருப்பிக் கொடுப்பவர்கள். ஒரு ஓட்டு வித்தியாசத்தில் வாஜ்பாய் அரசை வீழ்த்தி விட்டீர்கள். பதிலுக்குப் பதில் ஒரு ஓட்டில் மீண்டும் வாஜ்பாயை உட்கார வைப்போம். காட்டாற்று வெள்ளத்திலும் களமாடும் வைகோவின் தொண்டன் பதிலுக்குப் பதில் தருவான்.

## 3. கவிழ்ந்தார்கள்.. கவிழ்ந்தார்கள்.. கவிழ்வார்கள்..

நடந்து முடிந்த பன்னிரண்டாவது பொதுத் தேர்தலில் நிலையான ஆட்சி திறமையான பிரதமர் என்ற முழக்கத்தை முன் வைத்து வாஜ்பாய் வாகை சூடுவதற்குக் காரணமாக இருந்தவர்கள் சதி பெற்றெடுத்த சண்டாளக் காங்கிரசோடு கை கோர்த்து வாஜ்பாய் அரசைக் கவிழ்த்து விட்டார்கள். எது நடக்கக் கூடாது என்று நாளும் நினைத்தோமோ அது நடந்து முடிந்து விட்டது.

பாட வேண்டிய பாடலை பாடி முடிப்பதற்கு முன்னால் பாடகனுடைய நாக்கு நயவஞ்சகர்களால் துண்டிக்கப்பட்டு விட்டது.

வரைய வேண்டிய ஓவியத்தை வரைந்து முடிப்பதற்கு முன்னால் வண்ணக்கையும் வண்ணம் இருந்த கிண்ணத்தையும் கொடியவர்கள் கொட்டிக் கவிழ்த்து விட்டார்கள்.

இசைக்க வேண்டிய இசையை முடிப்பதற்கு முன்னால் நலம் தரும் வீணையை புழுதியில் எறிந்து விட்டார்கள் புல்லுருவிகள்.

மதவாதம் என்ற மாயமானைக் காட்டி வாஜ்பாயைக் காட்டுக்கு அனுப்பி விட்டார்கள். கண்ணும் கருத்தும் அற்ற கபோதிகள்.

வயலுக்கு இறைத்த நீர் வயலுக்கு வருவதற்கு முன்னாலேயே வாய்க்காலைப் பெயர்த்து விட்டார்கள் வஞ்சகர்கள்.

*கவிழ்த்தார்கள்.. கவிழ்ந்தார்கள்.. கவிழ்வார்கள்..*

மாற்று அரசை அமைப்பதற்கு மார்க்கம் காண முடியாத மலடுகள் மக்கள் மலைபோல் நம்பியிருந்த அரசைக் கவிழ்த்து ஆப்பசைத்த குரங்காய் அவதிப் படுவதைப் பார்த்து அகிலம் அவர்களைக் காரி உமிழ்கிறது. தன்னால் பேய்களின் தப்பாட்டத்திற்குத் தகுந்த அடி கொடுக்க மக்கள் மன்றம் தயாராகி விட்டது.

தமிழ்நாட்டு மக்களின் வியர்வையில் விளைந்த வரிப்பணத்தை ஆட்சி அதிகாரத்தைப் பயன்படுத்தி வாரிச் சுருட்டிக் கொண்டதால் வழக்கில் சிக்கிக் கொண்ட ஜெயலலிதா வழக்கில் இருந்து தப்புவதற்கு வாஜ்பாய் அரசு நீதியின் கழுத்தை நெரிக்க முன்வரவில்லை. சட்டப்படி ஜெயலலிதாவின் மீது வழக்கு தொடர்ந்திருக்கும் கலைஞர் அரசைக் கவிழ்க்க வாஜ்பாய் முன்வரவில்லை.

எனவே வாஜ்பாய் அரசைக் கவிழ்ப்பதற்கு எந்த விலையையும் கொடுக்கத் தயார் என எடுத்தேன் கவிழ்த்தேன் நிலையை இப்போதல்ல ; வாஜ்பாய் அரசு பதவியேற்க ஆதரவுக் கடிதம் கொடுப்பதிலேயே தாமதம் செய்தார். தயக்கம் காட்டினார். உருட்டலும் மிரட்டலும் ஆரம்பத்திலேயே ஜெயலலிதா தரப்பில் மத்திய அரசிற்கு விடுக்கப்பட்டது.

1998 மார்ச் முதல் வாரத்தில் ஒரு மிரட்டல். 1998 ஜூன் திங்கள் 10ஆம் தேதி வாக்கில் கலைஞர் அரசைக் கவிழ்க்க கெடு விதித்து ஒரு மிரட்டல். 1998ல் ஜூலை 23ல் காவிரிப் பிரச்சினையைக் காரணம் காட்டி மற்றொரு மிரட்டல். 1998 ஆகஸ்ட் 3ல் காவிரிச் செயலாக்கத் திட்டத்தைக் காரணம் காட்டி மிரட்டல். 1999 ஏப்ரல் 5ல்

### கவிழ்த்தார்கள்.. கவிழ்ந்தார்கள்.. கவிழ்வார்கள்..

பாதுகாப்புத் துறை அமைச்சர் மாண்புமிகு ஜார்ஜ் பெர்னாண்டசை பதவியில் இருந்து நீக்க வேண்டும் என்பதை நிபந்தனையாக வைத்து மிரட்டல் எனத் தொடர்ந்து வாஜ்பாயை அவரது அரசை நிலைகுலையச் செய்வதில் ஜெயலலிதா குரூர இன்பம் கண்டார்.

இஸ்ரேலிய கைக்கூலி - அமெரிக்க உளவாளி - அரசியல் மன நோயாளி சுப்பிரமணிய சுவாமி என்ற அழுக்குப் பயலை தன் அடிமுட்டாள் தனத்தை நிறைவேற்றித் தருவதற்கு கருவியாக பயன்படுத்திக் கொண்டார்.

ஆகாத அரசை அகற்றுவதற்கு ஒரு அரசியல் கட்சி என்ற நிலையில் அதற்கான ஆயுதத்தைப் பிரயோகிப்பதற்கு அனைவருக்கும் உரிமை உண்டு. காரணம் எதுவாக இருந்தாலும் அதை அடைவதற்கான வழிமுறைகள் நியாயமாக இருக்க வேண்டும். எள்ளளவு - எள்ளின் மூக்கின் அளவு - ஏன் மூக்கின் முனையளவு நியாயம் இந்த நீசர்கள் பக்கம் உண்டா?

மாஸ்கோவில் இந்தியத் தூதரகத்தில் கடற்படை உதவி அதிகாரியாகப் பணியாற்றிய கமோடர் பந்தோபாத்யாவைப் பந்தாட நினைத்த விஷ்ணு பகவத்தை..

பாதுகாப்புத்துறை அமைச்சரோடு பேசிய பாவத்துக்கு உன்னைக் கோர்ட் மார்ஷல் செய்யப் போகிறேன் என இன்றைய கடற்படைத் தளபதி நேற்றைய வைஸ் அட்மிரல் சுஸில் குமாரை மிரட்டிய மனித மிருகம் விஷ்ணு பகவத்தை......

***கவிழ்த்தார்கள்.. கவிழ்ந்தார்கள்.. கவிழ்வார்கள்..***

ஹரிந்தர் சிங் போன்ற நல்ல நாணயமான அதிகாரிகளை பழிவாங்கத் துடித்து இரசசிய ஊழியக் குறிப்புகளில் அவர்களுக்கு எதிரான ரிமார்க்குகளை எழுதி பழிவாங்கத் துடித்த பாவி விஷ்ணு பகவத்தை...

கடந்த இருபது வருடங்களாக நாடாளுமன்றத்தில் விவாதிக்கக் கூட மறுத்து வந்திருக்கும் ATV நீர்மூழ்கிக் கப்பல் விவகாரத்தைப் பத்திரிகைகளுக்கு வெட்ட வெளிச்சமாக்கி பேணிப் பாதுகாக்கப்பட வேண்டிய இராணுவ இரகசியத்தைப் பலர் அறிய பந்தி வைத்த தேசத் துரோகி விஷ்ணு பகவத்தை...

அன்னைத் தமிழ் நாட்டிற்கு அளப்பரிய பெருமைகளை ஈட்டித் தந்த அகிலம் போற்றும் அணு விஞ்ஞானி அப்துல் கலாமை அதிகாரத் தோரணையில் மிரட்டிய விஷ்ணு பகவத்தை...

கடற்படை பாதுகாப்புச் சட்டத்தையும் ரகசிய பாதுகாப்புச் சட்டத்தையும் மீறியவன் என்ற குற்றச்சாட்டுக்குள்ளாகி, சுதேசி விதேசி பிரச்சினையைக் கிளப்பி சோனியாவின் கன்னத்தில் அறைந்து தேசியவாதி காங்கிரஸ் கண்டு, சத்ரபதி சிவாஜி உலவிய மராட்டிய மண்ணில் காங்கிரசிற்கு கல்லறை கட்டிய சரத்பவாரால் காப்பாற்றப்பட்ட விஷ்ணுபவகத்தை...

இன்னோரன்ன காரணங்களால் பாதுகாப்புத் துறை அமைச்சரால் பதவி நீக்கம் செய்யப்பட்ட விஷ்ணு பகவத்தை மீண்டும் பதவியில் அமர்த்த வேண்டும் என்று போயஸ் பூதகி புலம்புவது ஏன்? இன்னின்ன காரணங்களால் பதவி நீக்கம்

செய்யப்பட்ட விஷ்ணு பகவத்தை மீண்டும் பதவியில் அமர்த்த ஏதாவதுகாரணங்களை முன் வைக்க முடிகிறதா? வேலைக்காரிக்கு பிள்ளை சாக்கு என்பதைப் போல் இந்த வெட்கம் கெட்ட கும்பல் ஏதாவது ஒரு குற்றச்சாட்டை முன் வைக்க வேண்டும் என்று சாக்கு போக்கு காட்டுவதில் என்ன நியாயம் இருக்க முடியும்.

தேசம் தழுவிய தொழிற்சங்கத் தலைவர் ஜார்ஜ் பெர்னாண்டசை...

காலமெல்லாம் தியாக வாழ்வு வாழ்ந்த டாக்டர் லோகியாவின் தலை மாணாக்கன் ஜார்ஜ் பெர்னாண்டசை...

எழுபத்தைந்து பொழுதுகளில் இந்தியாவின் இரண்டாவது சுதந்திரப் போரில் பிதாமகர் ஜெயப்பிரகாஷ் நாராயணன் கட்டளை பிறப்பித்த குருச்சேத்திரத்தில் ஆயுதம் தரிக்காத அர்ச்சுனனாக கண்ணிமைக்காமல் களத்தில் போராடிய ஜார்ஜ் பெர்னாண்டசை...

பரோடா வெடி குண்டு வழக்கில் சிக்க வைக்கப்பட்ட போதும் சிதையாத சிம்மம் ஜார்ஜ் பெர்னாண்டசை...

கால்களிலும் கரங்களிலும் விலங்குகள் பூட்டப்பட்டு இந்தியாவின் இருண்ட வீதிகளில் இழுத்து வரப்பட்ட போதும் எதிரிகளோடு சமரசம் செய்து கொள்ளாத ஜார்ஜ் பெர்னாண்டசை...

பாதுகாப்புத்துறை அமைச்சர் என்ற பதவியில் சிகரத்தைத் தொட்ட பின்னும் பத்துகாசு சேர்க்காத பத்தரை மாற்றுத் தங்கம் ஜார்ஜ் பெர்னாண்டசை..

*கவிழ்ந்தார்கள்.. கவிந்தார்கள்.. கவிழ்வார்கள்..*

ட்ரேடு யூனியனுக்குச் சொந்தமான காரில் வலம் வந்தும் அலுவலகக் கட்டிடத்தில் வாசம் செய்தும் எளிமையான சின்னமாக விளங்கும் ஜார்ஜ் பெர்னாண்டசை..

எங்கே எதிரிகளின் பீரங்கிச் சத்தம் கேட்கிறதோ, எந்த இடத்தில் துப்பாக்கிகளின் துந்துபி முழக்கம் இடையறாது ஒலிக்கிறதோ, எந்தப் பணிமலைப் பள்ளத்தாக்கில் மரணத்தோடு உடன்பாடு செய்து கொண்டு பனிமலை படிந்த பாறைகளில் இரத்த காவியம் எழுதிக்கொண்டு இருக்கிறார்களோ அங்கே குண்டு மழைகளுக்கு மத்தியில் இன்னுயிர் ஈந்திடவும் சித்தமாக இருக்கிற இராணுவ வீரர்களின் தோளில் தோழமை கொள்ளும் ஜார்ஜ் பெர்னாண்டசை...

பதவி விலகச் சொல்லி பரதம் ஆடும் கும்பல் பம்மாத்து காட்டுகிறது. தேசபக்தத் திலகங்கள் தேச நலனுக்காகத் தான் பாதுகாப்புத் துறை அமைச்சரை பதவி விலகச் சொல்லுகிறார்களாம்.

அன்னை நாட்டை அயலவர் ஆக்ரமிப்பில் இருந்து காக்க ஆயுதம் வாங்கியதில் கமிஷன் 33 கோடியை வாங்கிக் கொடுத்த ஆயுதத்தரகன் குட்ரோச்சியின் கூட்டாளி சோனியாவும் அன்னிய செலவாணி மோசடி வழக்கில் சிக்கிக்கொண்ட ஜெயலலிதாவும் தேச நலன் காக்க புறப்பட்டு இருக்கிறார்கள். இதைச் சிந்திக்கும் பொழுது நாஞ்சில் நாட்டுப் பழமொழி ஒன்றுதான் நினைவுக்கு

வருகிறது. `யோக்கியன் வருகிறான். செம்பை எடுத்து உள்ளே வையுங்கள்' என்பதுதான் அந்தப் பழமொழி.

ஜெயா-சோனியா-மாயா என இணைந்திருக்கும் இந்த மூன்று அரசியல் ஆயாக்களின் அருவறுக்கத் தக்க அரசியல் நடவடிக்கைகள் மாயாஜாலம் போலத் தோன்றினாலும் அவர்களுக்கும் ஒரு திட்டம் இருக்கிறது. முறை இருக்கிறது. அவன் பைத்தியக்காரத் தனத்திலும் ஒரு திட்டமும் முறையும் இருக்கிறது There is scheme even in his madness என்றான் ஷேக்ஸ்பியர். அந்த திட்டம் நாட்டை ரணமாக்கிச் சீர்குலைப்பதுதான்.

வேரிற் பழுத்த பலாபோல கோரிக்கை அற்றுக் கிடந்த சேது சமுத்திரத் திட்டத்தை நிறைவேற்ற முன்வந்தது வாஜ்பாய் அரசு. அதற்கான முயற்சிகளைப் பக்குவமாக மேற்கொண்டு சாதனைச் சரித்திரம் படைத்தவர் நம் குலத்தலைவர் வைகோ. இதைக் கொண்டாட வேண்டியவர்கள் திண்டாடுகிறார்களே – ஏன்?

சேது சமுத்திரத் திட்டம் நிறைவேற்றப் பட்டால் கொழும்பின் கொழுப்பு அடங்கும். தூர சேத நாடுகளுக்கு நம் தூத்துக்குடியில் இருந்து கப்பல்கள் சென்றுவரும். வங்கக் கடலோரத்தின் வீதிகளை வசந்தம் தாலாட்டும். தங்கத் தமிழகம் - சங்கத் தமிழகம் மீண்டும் மலரும். தமிழ் மக்களைத் தன் சொந்த தேசத்தில் சுட்டுக் கொன்று சூறையாடி வரும் சந்திரிகா இதைத் தாங்கிக் கொள்வாரா? மாட்டார். தகர்க்க நினைத்தார். தரகர்களைத் தேடினார். தேசத்தைப் பலி கொடுக்கத் தயாராயினர் ஜெயலலிதாவும்

***கவிழ்த்தார்கள்.. கவிழ்ந்தார்கள். கவிழ்வார்கள்..***

சோனியாவும். இதுதான் திரைமறைவு நாடகத்தின் மூலக்கதை.

அகிலத்தைத் தன் ஆதிபத்தியத்துக்குள் கொண்டு வர நினைத்த அமெரிக்காவின் கன்னத்தில் அறைந்த வாஜ்பாயின் அரசை அசைக்க நினைத்த அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் பகாசுரப் பசிக்குத் தீனியானார் சுப்பிரமணியசாமி. இந்தத் திருட்டுக் கும்பல்களின் தீய தேச விரோத முயற்சிகளுக்கு சோனியா காங்கிரஸ் துணை நின்றதில் வியப்பேதுமில்லை.

மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட மாநில அரசுகளை அரசியல் சட்டத்தின் 356வது பிரிவைப் பயன்படுத்தி 95 முறை கவிழ்த்த காங்கிரஸ், அரியானா போலீசார் வேவு பார்த்தனர் என்ற காரணத்தைக் காட்டி தன் தயவில் ஊசலாடிக் கொண்டிருந்த சந்திரசேகரைக் கவிழ்த்த காங்கிரஸ், தேவகவுடா பிரதமராக இருக்கும் பட்சத்தில் ஐக்கிய முன்னணியின் அரசுக்கு ஆதரவு இல்லை என அறிவித்து தேவகவுடாவின் குடைசாய்த்த காங்கிரஸ், தி.மு.க. அமைச்சர்கள் அங்கம் வகிக்கிற குஜ்ரால் அரசுக்கு ஆதரவு இல்லை என அறிவித்து 12வது பொதுத்தேர்தலை எதிர் கொள்ள வழி கண்ட வன்மம் கொண்ட காங்கிரஸ் இப்போதும் ஜெயலலிதாவின் பைத்தியத்திற்குப் பால் வார்த்திருக்கிறது? பழிக்கஞ்சா செயலைச் செய்திருக்கிறது.

மதவாதம் - வகுப்புவாதம் என வாதம் செய்வதற்குரிய உரிமையும் யோக்கியதையும் காங்கிரசிற்கு இல்லை. கரசேவகர்கள் பாபர் மசூதியை உடைத்து நொறுக்கிய போது காணக் கண்ணிருந்தும் காணும்

திறமையற்ற கையாலாகாத ஆட்சியாக வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த கட்சி தான் காங்கிரஸ் கட்சி. இதைப் பாராளுமன்றத்தில் போட்டுடைத்தபோது வைகோவின் கேள்விக்குப் பதில் சொல்லமுடியாமல் விறகுக் கட்டையைப் போல் வெட்கமில்லாமல் உட்கார்ந்து இருந்ததை வையகம் பார்த்துக் கொண்டு தான் இருந்தது. மக்கள் மன்றம் அதற்கான தெளிந்த தீர்ப்பை எழுதக் காத்திருக்கிறது.

"நிலையான அரசு இல்லை என்பது இந்தியாவின் கர்மமாக இருக்க வேண்டும். கடந்த மூன்றாண்டு காலமாக இந்தியாவின் விதி இப்படித் தான் இருந்து வருகிறது. அப்படி ஒரு கர்மம் இல்லையென்றால் வெள்ளிக்கிழமை இரவு நாடாளுமன்றம் போன்ற பரிசுத்தமான இடத்தில் மாயாவதி ஏன் பொய் சொல்லவேண்டும்? சைஃபுதீன் போஸ் தன்னுடைய கடந்த கால அரசியலை முழுவதும் மறந்து விட்டு தேசிய மாநாட்டில் இருந்து ஏன் பிரிந்து செல்ல வேண்டும்? நீதி நெறி வழுவாத கிரிதர் கோமான் போன்ற அரசியல் தலைவர் முன்மாதிரிகளைப் புறக்கணித்து விட்டு ஏன் வாக்களிக்க வேண்டும்? பாரதீய ஜனதாக் கட்சியின் அணியில் இருந்த ஜெயலலிதா அரசை பிளாக்மெயில் செய்ததும் முதுகில் குத்தியதும் எந்த நெறி முறைக்கும் உகந்தது அல்ல. ஜெயலலிதாவிடம் சரி எது? தவறு எது? என்று பிரித்துப் பார்த்து நடந்து கொள்ளக் கூடிய குணம் கிடையாது. பதவியைத் தவறாகப் பயன்படுத்தி பல்வேறு ஊழல் குற்றச்சசாட்டுகளுக்கு ஆளானவர் அவர். நாடாளுமன்றத்தில் நடந்த நிகழ்ச்சி இந்தியாவை மீட்க முடியாத குழப்பத்தில் ஆழ்த்தி விட்டது என நடந்து முடிந்த நயவஞ்சக நாடகத்தை தி பயோனியர் ஏடு வர்ணித்-திருக்கிறது.

***கவிழ்நதார்கள்.. கவிழ்ந்தார்கள்..கவிழ்வார்கள்..***

மும்பை ஸ்டாக் எக்ஸ்சேஞ்சில் பங்குகளின் மதிப்பு 250 புள்ளிகள் வீழ்ச்சி அடைந்தன. டெல்லி ஸ்டாக் எக்ஸ்சேஞ்சிலும் பங்குகளின் விலை 83 புள்ளிகள் குறைந்தன. இந்தப் பொருளாதார நாசத்திற்கு வித்திட்ட நாசகாரக் கும்பல்களுக்கு எத்தனை கோடி கிடைத்ததோ யாமறியோம் பராபரமே!

மணிமுடி தரித்த மன்னர்கள் மட்டுமே தங்கும் தகுதி படைத்த மவுரியா ஷெட்டன் சந்திர குப்த மவுரியா ஸூட்டில் மைசூர் அரண்மனையில் சேவகம் செய்த வாரிசுகள் தங்க வாரியிறைத்த பொற்காசுகள், அடித்த கூத்துக்கள், ஆடிய ஆட்டங்கள், பேசிய பேரங்கள், தேடி வந்து சந்தித்த தேச பக்த திலகங்களின் திடீர் பேட்டிகள், தில்லு முல்லுகள், திருவிளையாடல்கள்... என அரங்கேறிய எல்லா அவலங்களையும் பார்த்துக் தலை குனிந்த தமிழர்கள் தலை நிமிருவார்கள்.

அப்போது இவர்கள் எல்லாம் தலைமறைவாகிப் போக இப்போதே திட்டம் இடுகிறார்கள். அவர்களுக்கான விதியை அவர்களே தேடிக் கொண்டார்கள் என நாம் ஆறுதல் பெற முடியாது. வெசுவியஸ் எரிமலை வெடித்துச் சிதறிய பொழுது உலகத்தின் செல்வம் கொழுத்த பாம்பி நகரம் உருத்தெரியாமல் அழிந்ததைப் போல் அழிந்து போவார்கள். கில்லட்டின்களை பயன்படுத்த பழகிக் கொள்வோம்.

கவிழ்த்தவர்கள் கவிழ்ந்த வேகத்திலேயே கவிழ்ந்து விட்டார்கள். இனி கவிழ்வார்கள். காணாமல் போவார்கள். காலம் வழங்குகிற கசையடியில் இருந்து இவர்களை யாரும் காப்பாற்ற முடியாது.